குறிப்பு

இந்திய எழுத்தாளர் பிங்கலா (கி.மு. 200) புரோசோடியை விவரிப்பதற்காக மேம்பட்ட கணிதக் கருத்துக்களை உருவாக்கினார், அவ்வாறு செய்யும்போது பைனரி எண் முறையின் முதல் அறியப்பட்ட விளக்கத்தை முன்வைத்தார்.

இதேபோன்ற பைனரி சேர்க்கைகள் பாரம்பரிய ஆப்பிரிக்க கணிப்பு முறைகளான இ.ஃ.பா மற்றும் இடைக்கால மேற்கத்திய புவியியலிலும் பயன்படுத்தப்பட்டுள்ளன. புவியியலில் பயன்படுத்தப்படும் அடிப்படை-2 அமைப்பு நீண்ட காலமாக துணை-சஹாரா ஆப்பிரிக்காவில் பரவலாகப் பயன்படுத்தப்பட்டது.

1605ஆம் ஆண்டில், பிரான்சிஸ் பேகன் ஒரு அமைப்பைப் பற்றி விவாதித்தார். இதன் மூலம் எழுத்துக்களின் பைனரி இலக்கங்களின் வரிசைகளாகக் குறைக்கப்பட்டது. பின்னர் அவை எந்தவொரு சீரற்ற உரையிலும் எழுத்துருவில் காணக்கூடிய மாறுபாடுகளாக குறியிடப்பட்டது. முக்கியமாக பைனரி குறியாக்கத்தின் பொதுவான கோட்பாட்டிற்கு, இந்த முறையை எந்தவொரு பொருளுடனும் பயன்படுத்த முடியும் என்று அவர் மேலும் கூறினார்.

1937ஆம் ஆண்டில், கிளாட் ஷானன் தனது ஆய்வறிக்கையை எம்ஐடியில் தயாரித்தார். இது பூலியன் இயற்கணிதம் மற்றும் பைனரி எண்கணிதத்தை மின்னணு தொடர்சுற்று மற்றும் சுவிட்சுகளைப் பயன்படுத்தி வரலாற்றில் முதல் முறையாக செயல்படுத்தியது. தொடர்சுற்று மற்றும் ஸ்விட்சிங் சுற்றுகள் பற்றிய ஒரு குறியீட்டு பகுப்பாய்வு என்ற தலைப்பில், ஷானனின் ஆய்வறிக்கை அடிப்படையில் நடைமுறை மின்னணு சுற்று வடிவமைப்பை நிறுவியது.

அமெரிக்க கணித சங்க மாநாட்டில், ஸ்டிபிட்ஸ் என்பவர் சிக்கலான எண் கால்குலேட்டர் ரிமோட் கட்டளைகளை தொலைபேசி இணைப்புகள் வழியாக ஒரு டெலிடிப் மூலம் அனுப்ப முடிந்தது. தொலைபேசி இணைப்பில் தொலைதூரத்தில் பயன்படுத்தப்பட்ட முதல் கணினி இயந்திரம் இதுவாகும்.

ஒரு பைனரி எண்ணை எந்த வரிசை பிட்களாலும் (பைனரி இலக்கங்கள்) குறிக்க முடியும், இது இரண்டு பரஸ்பர பிரத்தியேக மாநிலங்களில் இருக்கக்கூடிய எந்தவொரு பொறிமுறையினாலும் குறிக்கப்படலாம். சின்னங்களின் பின்வரும் வரிசைமுறைகள் அனைத்தும் 667 இன் பைனரி எண் மதிப்பாக விளக்கப்படலாம்:

ஒவ்வொரு வழக்கிலும் குறிப்பிடப்படும் எண் மதிப்பு ஒவ்வொரு சின்னத்திற்கும் ஒதுக்கப்பட்ட மதிப்பைப் பொறுத்தது. ஒரு கணினியில், எண் மதிப்புகள் இரண்டு வெவ்வேறு மின்னழுத்தங்களால்

குறிப்பு

குறிப்பிடப்படலாம். ஒரு காந்த வட்டில், காந்த துருவமுனைப்புகள் பயன்படுத்தப்படலாம். ஒரு "நேர்மறை", "ஆம்" அல்லது "ஆன்" நிலை என்பது ஒன்றின் எண் மதிப்புக்கு சமமானதல்ல. இது பயன்பாட்டில் உள்ள கட்டமைப்பைப் பொறுத்தது.

அரபு எண்களைப் பயன்படுத்தி எண்களின் வழக்கமான பிரதிநிதித்துவத்துடன், பைனரி எண்கள் பொதுவாக 0 மற்றும் 1 சின்னங்களைப் பயன்படுத்தி எழுதப்படுகின்றன. எழுதும் போது, பைனரி எண்கள் பெரும்பாலும் சந்தா, முன்னொட்டு அல்லது பின்னொட்டு அவற்றின் அடிப்படை அல்லது ரேடிக்ஸ் குறிக்கப்படுகின்றன. பின்வரும் குறிப்புகள் சமமானவை:

100101 பைனரி (வடிவமைப்பின் வெளிப்படையான அறிக்கை)

100101 (பைனரி வடிவமைப்பைக் குறிக்கும் பின்னொட்டு)

100101 (பைனரி வடிவமைப்பைக் குறிக்கும் பின்னொட்டு)

பின் 100101 (பைனரி வடிவமைப்பைக் குறிக்கும் முன்னொட்டு)

பேசும்போது, பைனரி எண்கள் பொதுவாக தசம எண்களிலிருந்து வேறுபடுவதற்காக, வலமிருந்து இடமாகவும், இலக்கத்தால் இலக்கமாகவும் படிக்கப்படுகின்றன. உதாரணமாக, பைனரி எண் 100 உச்சரிக்கப்படுகிறது.

பைனரியில் எண்ணுவது வேறு எந்த எண் அமைப்பிலும் எண்ணுவதற்கு ஒத்ததாகும். ஒற்றை இலக்கத்துடன் தொடங்கி, ஒவ்வொரு குறியீட்டின் மூலமும், அதிகரிக்கும் வரிசையில் எண்ணுகிறது. தசம எண்ணானது 0 முதல் 9 வரையிலான குறியீடுகளைப் பயன்படுத்துகிறது, அதே சமயம் பைனரி 0 மற்றும் 1 குறியீடுகளை மட்டுமே பயன்படுத்துகிறது.

முதல் இலக்கத்திற்கான சின்னங்கள் தீர்ந்துவிட்டால், அடுத்த உயர் இலக்கத்தை (இடதுபுறமாக) அதிகரிக்கிறது, மேலும் எண்ணுதல் 0 இல் தொடங்குகிறது. தசமத்தில், எண்ணுவது அவ்வாறு தொடர்கிறது:

000, 001, 002, ... 007, 008, 009, (வலதுபுற இலக்கமானது தொடங்குகிறது, அடுத்த இலக்கத்தை அதிகரிக்கிறது)

0 1 0, 011, 012, ...

...

090, 091, 092, ... 097, 098, 099, (வலதுபுறம் இரண்டு இலக்கங்கள் தொடங்குகின்றன, அடுத்த இலக்கத்தை அதிகரிக்கிறது)

1 00, 101, 102, ...

குறிப்பு

ஒரு எண் 9 ஐ அடைந்த பிறகு, ஒரு அதிகரிப்பு அதை 0 ஆக மீட்டமைக்கிறது, ஆனால் அடுத்த இலக்கத்தை இடதுபுறமாக அதிகரிக்கச் செய்கிறது. பைனரியில், 0 மற்றும் 1 ஆகிய இரண்டு சின்னங்கள் மட்டுமே பயன்படுத்தப்படுவதைத் தவிர எண்ணுவது ஒன்றே. இவ்வாறு இலக்கத்துடன் பைனரி 1 அடையும் பிறகு, 0 ஒரு அதிகரிப்பு மீட்டமைவுகள் அது ஆனால் இடது அடுத்த இலக்கத்தை இது ஒரு அதிகரிப்பு ஏற்படுத்துகிறது:

0000,
000 1 , (வலதுபுற இலக்கமானது தொடங்குகிறது, அடுத்த இலக்கத்தை அதிகரிக்கும்)

00 1 0, 0011, (வலதுபுறம் இரண்டு இலக்கங்கள் தொடங்குகின்றன, அடுத்த இலக்கத்தை அதிகரிக்கும்)
0 1 00, 0101, 0110, 0111, (வலதுபுறம் மூன்று இலக்கங்கள் தொடங்குகின்றன, அடுத்த இலக்கத்தை அதிகரிக்கிறது)

1 000, 1001, ...

பைனரி குறியீடுகளில் எண்ணுவதற்கான மற்றொரு வழி, ஒவ்வொரு இலக்கத்தையும் இரண்டு சக்தியாகப் பார்ப்பது. ஒவ்வொரு இலக்கமும் அதிகபட்சம் 0 மற்றும் 1 என்ற இரண்டு எண்களை மட்டுமே வழங்க முடியும் என்பதால், ஒவ்வொரு இலக்கத்தையும் ஒரு சுவிட்சாக ஒருவர் பார்க்க முடியும்.
இந்த சுவிட்ச் ஆன் அல்லது ஆ.்.ப் ஆகலாம் (1 அல்லது 0). ஒரு சுவிட்ச் உங்களுக்கு அதிகபட்சமாக 2 விளைவுகளை (1 மற்றும் 0) வழங்கும். நீங்கள் மற்றொாரு சுவிட்ச் சேர்க்க வேண்டுமெனில், பின்னர் அதிகபட்சமாக கிடைக்கும் அளவு 2 2 ஸ்ரீ 4 வெளிப்பாடுகள் (00, 01, 10, 11). நீங்கள் மூன்று சுவிட்சுகள் இருந்தால், நீங்கள் பின்னர் அதிகபட்சமாக கிடைக்கும் அளவு 2 3 பல ஸ்ரீ 8 விளைவுகளை, மற்றும்.

இந்த வழக்கில், ஒவ்வொரு முறையும் மற்றொரு இலக்கத்தைப் பயன்படுத்தும்போது, பைனரி குறியீடு குறிக்கும் எண் 2 சக்தியால் அதிகரித்துள்ளது. எடுத்துக்காட்டாக, பைனரி எண்களில் 13 என்றால் என்ன? 16, 13 ≥ 8 (அல்லது 2 4 , 13 ≥ 2 3 ) என்பதால், மிக உயர்ந்த இலக்கமானது 8 ஐ குறிக்கும் என்றும், ”01000” 8 ஐ குறிக்கிறது என்றும் எங்களுக்குத் தெரியும் (1 க்கு முன்னால் உள்ள 0 தேவையற்றது என்பதை நினைவில் கொள்க).
”01000” 8, 13−8 ஸ்ரீ 5 ஐக் குறிப்பதால், 8, 5 ≥ 4 (அல்லது 2 3 , 5 ≥ 2 2 ) என்பதால், நாம் 4 ஐ சேர்க்க வேண்டும் என்பது எங்களுக்குத்

தெரியும். "00100" 4, 8, 4 12ஐக் குறிக்கிறது என்பதால் ஸ்ரீ "01000" ҙ "00100" ஸ்ரீ "01100".

குறிப்பு

நாம் பிரதிநிதித்துவப்படுத்த விரும்பும் எண் 13, 13−12 ஸ்ரீ 1 என்பதால், 1 ஐயும் சேர்க்க வேண்டும். 1 பைனரியில் "00001", எனவே "01100" ҙ "00001" ஸ்ரீ "01101" ஸ்ரீ 13.

பைனரியில் உள்ள எண்கணிதம் மற்ற எண் அமைப்புகளில் உள்ள எண்கணிதத்தைப் போன்றது. பைனரி எண்களில் கூட்டல், கழித்தல், பெருக்கல் மற்றும் பிரிவு ஆகியவை செய்யப்படலாம்.

**பைனரி எண்கணிதம்**

பைனரியில் உள்ள எண்கணிதம் மற்ற எண் அமைப்புகளில் எண்கணிதத்தைப் போன்றது. பைனரி எண்களில் கூட்டல், கழித்தல், பெருக்கல் மற்றும் பிரிவு ஆகியவை செய்யப்படலாம்.

**கூட்டல்**

பைனரியில் எளிமையான எண்கணித செயல்பாடு கூடுதலாக உள்ளது. இரண்டு ஒற்றை இலக்க பைனரி எண்களைச் சேர்ப்பது ஒப்பீட்டளவில் எளிதானது, இது ஒரு வடிவத்தை எடுத்துச் செல்கிறது:

$0 + 0 \rightarrow 0$

$0 + 1 \rightarrow 1$

$1 + 0 \rightarrow 1$

$1 + 1 \rightarrow$ 0, 1 ஐ எடுத்துச் செல்லுங்கள் (பைனரியில் $1 + 1 = 0 + 1 \times 10$ என்பதால்)

இரண்டு "1" இலக்கங்களைச் சேர்ப்பது "0" இலக்கத்தை உருவாக்குகிறது, அதே நேரத்தில் 1 அடுத்த நெடுவரிசையில் சேர்க்கப்பட வேண்டும். சில ஒற்றை இலக்க எண்களை ஒன்றாகச் சேர்க்கும்போது இது தசமத்தில் என்ன நிகழ்கிறது என்பதற்கு ஒத்ததாகும்; இதன் விளைவாக ரேடிக்ஸ் (10) இன் மதிப்புக்கு சமமாகவோ அல்லது அதிகமாகவோ இருந்தால், இடதுபுறத்தில் உள்ள இலக்கமானது அதிகரிக்கப்படுகிறது:

**கழித்தல்**

கழித்தல் அதே வழியில் செயல்படுகிறது:

$0 - 0 \rightarrow 0$

0 - 1 → 1, கடன் 1

1 - 0 → 1

1 - 1 → 0

குறிப்பு

“1” இலக்கத்தை "0" இலக்கத்திலிருந்து கழிப்பதன் மூலம் “1” இலக்கத்தை உருவாக்குகிறது, அதே நேரத்தில் 1 அடுத்த நெடுவரிசையிலிருந்து கழிக்கப்பட வேண்டும். இது கடன் வாங்குதல் என்று அழைக்கப்படுகிறது. கழித்தலின் விளைவாக 0 ஐ விடக் குறைவாக இருக்கும்போது, ஒரு இலக்கத்தின் மிகக் குறைந்த மதிப்பு, நடைமுறை என்பது இடதுபுறத்தில் இருந்து ரேடிக்ஸ் (அதாவது 1010) ஆல் வகுக்கப்பட்ட பற்றாக்குறையை “கடன்” பெறுவது, அதை அடுத்த நிலையில் இருந்து கழித்தல் மதிப்பு.

**பெருக்கல்**

பைனரியில் பெருக்கல் அதன் தசம எண்ணுக்கு ஒத்ததாகும். இரண்டு எண்கள் *அ* மற்றும் *ஆ* பகுதி தயாரிப்புகளால் பெருக்கிக்கொள்ள முடியும். ஒவ்வொரு இலக்கத்துக்காக *ஆ*, அந்த இலக்கத்தை இது தயாரிப்பு ஒரு கணக்கிடப்பட்டு ஒரு புதிய வரி எழுதப்பட்ட, எனவே இடதுபுற மாற்றப்படும் என்று ஐக்கிய அதன் வலதுபக்கத்தின் ஐக்கிய வரிகளை வரை *ஆ* என்று பயன்படுத்தப்பட்டது. இந்த பகுதி தயாரிப்புகளின் கூட்டுத்தொகை இறுதி முடிவை அளிக்கிறது.

பைனரியில் இரண்டு இலக்கங்கள் மட்டுமே இருப்பதால், ஒவ்வொரு பகுதி பெருக்கத்தின் இரண்டு சாத்தியமான விளைவுகள் மட்டுமே உள்ளன:

- *ஆ*-ல் உள்ள இலக்கமானது 0 ஆக இருந்தால், பகுதி 0 ஆகும்
- *ஆ*-ல் உள்ள இலக்கமானது 1 எனில், பகுதி *அ* க்கு சமம்

## 10.3 ஆக்டல் மற்றும் ஹெக்ஸாடெசிமல் எண் (Octal and Hexadecimal)

**ஆக்டல்**

பைனரி எளிதில் ஆக்டல் எண் முறைக்கு மாற்றப்படுகிறது, ஏனெனில் ஆக்டல் 8 இன் ரேடிக்ஸ் பயன்படுத்துகிறது, இது இரண்டு சக்தியாகும் (அதாவது 2 3, எனவே ஒரு ஆக்டல் இலக்கத்தை குறிக்க சரியாக மூன்று பைனரி இலக்கங்கள் தேவைப்படும்). எண்ம மற்றும் பைனரி எண்கள் இடையே உள்ள தொடர்புகள், முதல் எட்டு இலக்கங்களையும் அதே தான் அறுபதின்ம மேலே உள்ள அட்டவணையில். பைனரி 000 ஆக்டல் இலக்க 0க்கு சமம், பைனரி 111 ஆக்டல் 7க்கு சமம்.

| Octal | Binary |
|---|---|
| 0 | 000 |
| 1 | 001 |
| 2 | 010 |
| 3 | 011 |
| 4 | 100 |
| 5 | 101 |
| 6 | 110 |
| 7 | 111 |

*படம் 3 : ஆக்டல் அமைப்பு*

குறிப்பு

ஆக்சலில் இருந்து பைனரி வருமானமாக மாற்றுவது ஹெக்ஸாடெசிமலுக்கு செய்யும் அதே பாணியில் :

$65_8$ = 110 $101_2$

$17_8$ = 001 $111_2$

மற்றும் பைனரி முதல் ஆக்டல் வரை:

$101100_2$ = 101 $100_2$ தொகுக்கப்பட்ட = $54_8$

$10011_2$ = 010 $011_2$ திணிப்புடன் தொகுக்கப்பட்டுள்ளது = $23_8$

**ஹெக்ஸாடெசிமல்**

பைனரி ஹெக்ஸாடெசிமலில் இருந்து மேலும் எளிதாக மாற்றப்படலாம். ஏனென்றால், ஹெக்ஸாடெசிமல் அமைப்பின் ரேடிக்ஸ் (16) பைனரி அமைப்பின் ரேடிக்ஸின் சக்தி (2). மேலும் 16 = 2 4, எனவே ஒரு இலக்க ஹெக்ஸாடெசிமலைக் குறிக்க நான்கு இலக்க பைனரி எடுக்கும்.

பின்வரும் அட்டவணை ஒவ்வொரு ஹெக்ஸாடெசிமல் இலக்கத்தையும் சமமான தசம மதிப்பு மற்றும் நான்கு இலக்க பைனரி வரிசையையும் காட்டுகிறது:

குறிப்பு

| Hex | Dec | Binary |
|---|---|---|
| 0 | 0 | 0000 |
| 1 | 1 | 0001 |
| 2 | 2 | 0010 |
| 3 | 3 | 0011 |
| 4 | 4 | 0100 |
| 5 | 5 | 0101 |
| 6 | 6 | 0110 |
| 7 | 7 | 0111 |
| 8 | 8 | 1000 |
| 9 | 9 | 1001 |
| A | 10 | 1010 |
| B | 11 | 1011 |
| C | 12 | 1100 |
| D | 13 | 1101 |
| E | 14 | 1110 |
| F | 15 | 1111 |

*படம் 3 : ஹெக்ஸாடெசிமல் அமைப்பு*

ஒரு ஹெக்ஸாடெசிமல் எண்ணை அதன் பைனரி சமமாக மாற்ற, தொடர்புடைய பைனரி இலக்கங்களை மாற்றவும்:

$3A_{16}$ = 0011 1010 2

$E7_{16}$ = 1110 0111 2

ஒரு பைனரி எண்ணை அதன் ஹெக்ஸாடெசிமல் சமமாக மாற்ற, அதை நான்கு பிட்களின் குழுக்களாக பிரிக்கவும். பிட்களின் எண்ணிக்கை நான்கு மடங்காக இல்லாவிட்டால் , இடதுபுறத்தில் கூடுதல் 0 பிட்களைச் செருகவும் (திணிப்பு என அழைக்கப்படுகிறது). உதாரணத்திற்கு:

$1010010_2$ = 0101 $0010_2$ திணிப்புடன் தொகுக்கப்பட்டுள்ளது = $52_{16}$

$11011101_2$ = 1101 $1101_2$ தொகுக்கப்பட்ட = $DD_{16}$

ஒரு ஹெக்ஸாடெசிமல் எண்ணை அதன் தசம சமமாக மாற்ற, ஒவ்வொரு ஹெக்ஸாடெசிமல் இலக்கத்தின் தசம சமமான 16 இன் சக்தியால் பெருக்கி, அதன் விளைவாக வரும் மதிப்புகளைச் சேர்க்கவேண்டும்.

## 10.4 தரவுகளின் பிரதிநிதித்துவம்

குறிப்பு

எதிர்மறை சக்திகளைப் பயன்படுத்துவதன் மூலம் முழு எண் அல்லாதவற்றைக் குறிப்பிடலாம், அவை மற்ற இலக்கங்களிலிருந்து ரேடிக்ஸ் புள்ளியின் மூலம் அமைக்கப்படுகின்றன (தசம அமைப்பில் தசம புள்ளி என அழைக்கப்படுகிறது). எடுத்துக்காட்டாக, பைனரி எண் $11.01_2$ இதன் பொருள்:

$1 \times 2^1$ $(1 \times 2 = 2)$ +
$1 \times 2$ 0 $(1 \times 1 = 1)$ +
$0 \times 2$ -1 $(0 \times ½ = 0)$ +
$1 \times 2$ -2 $(1 \times 1/4 = 0.25)$ +
மொத்தம் 3.25 தசமத்திற்கு.

அனைத்து டயாடிக் பகுத்தறிவு எண்களும் $\frac{p}{2^a}$ ல் முடிவடையும் பைனரி எண்களைக் கொண்டுள்ளன பைனரி பிரதிநிதித்துவம் ரேடிக்ஸ் புள்ளிக்குப் பிறகு வரையறுக்கப்பட்ட எண்ணிக்கையிலான சொற்களைக் கொண்டுள்ளது. பிற பகுத்தறிவு எண்கள் பைனரி பிரதிநிதித்துவத்தைக் கொண்டிருக்கின்றன, ஆனால் நிறுத்தப்படுவதற்குப் பதிலாக, அவை மீண்டும் மீண்டும் நிகழ்கின்றன. வரையறுக்கப்பட்ட வரிசை இலக்கங்கள் காலவரையின்றி மீண்டும் நிகழ்கின்றன. உதாரணமாக

$$\frac{1_{10}}{3_{10}} = \frac{1_2}{11_2} = 0.010101\overline{01}\ldots_2$$
$$\frac{12_{10}}{17_{10}} = \frac{1100_2}{10001_2} = 0.1011010010110100\overline{10110100}\ldots_2$$

எந்தவொரு பகுத்தறிவின் பைனரி பிரதிநிதித்துவம் முடிவடைகிறது அல்லது மீண்டும் நிகழ்கிறது என்ற நிகழ்வு பிற ரேடிக்ஸ் அடிப்படையிலான எண் அமைப்புகளிலும் நிகழ்கிறது. உதாரணமாக, தசமத்தில் விளக்கம் பார்க்கவும். மற்றொரு ஒற்றுமை என்னவென்றால், எந்தவொரு முடிவடையும் பிரதிநிதித்துவத்திற்கும் மாற்று பிரதிநிதித்துவங்களின் இருப்பு, 0.111111 என்பது $2^{-1}$ + $2^{-2}$ + $2^{-3}$ +. இது 1 என்ற வடிவியல் தொடரின் கூட்டுத்தொகையாகும்.

நிறுத்தப்படாத அல்லது மீண்டும் நிகழாத பைனரி எண்கள் பகுத்தறிவற்ற எண்களைக் குறிக்கின்றன. உதாரணமாக,

0.1010010001000010000100 .... ஒரு வடிவத்தைக் கொண்டுள்ளது, ஆனால் இது ஒரு நிலையான நீள தொடர்ச்சியான முறை அல்ல, எனவே எண்ணிக்கை பகுத்தறிவற்றது

1.0110101000001001111001100110011111110 என்பது 2ன் சதுர மூலத்தின் பைனரி பிரதிநிதித்துவம், மற்றொரு பகுத்தறிவற்றது. இது எந்த தெளிவான வடிவத்தையும் கொண்டிருக்கவில்லை.

குறிப்பு

## 10.5 சுய பரிசோதனைக் கேள்விகள்

1. தரவுச் செயலாக்கத்தின் அடிப்படைக் கருத்துகள் யாவை?
2. பைனரி எண் அமைப்பு பற்றி விளக்குக.
3. ஆக்டல் மற்றும் ஹெக்ஸாடெசிமல் எண்களைப் பற்றி விவரிக்கவும்.
4. தரவுகளின் பிரதிநிதித்துவம் பற்றி விளக்கவும்.

# அலகு 11

# கணினி மற்றும் அதன் சாதனங்கள்

# (Computer and Peripherals)

குறிப்பு

**அமைப்பு**


11.1 கணினி - அறிமுகம்

11.2 மைய செயலாக்ககம் (Central Processing Unit)

11.3 முக்கிய நினைவகம் (Main Memory)

11.4 கணினி சாதனங்களின் கட்டுப்பாடு (Peripheral Controllers)

11.5 கணினி சாதனங்கள் (Peripheral Controllers)

11.6 சுய பரிசோதனைக் கேள்விகள்


## 11.1 கணினி - அறிமுகம்

இன்றைய நவீன தொழில்நுட்ப வளர்ச்சி வங்கித் துறையை மிகவும் மேம்படுத்தப்பட்ட வளர்ச்சியினை அளித்திருக்கிறது. கணினியின அபார வளர்ச்சியின் காரணமாக இன்றைய வணிக உலகம் கணினியின் சேவையை நம்பியே உள்ளது. குறிப்பாக நிதி தொடர்பான துறைகளுக்கு கணினி மிகச் சிறந்த சேவையாற்றி வருகிறது என்றால் அது மிகையில்லை.

## 11.2 மைய செயலாக்ககம் (Central Processing Unit)

கணிப்பொணியின் மையச் செயலாக்ககத்தைக் கணிப்பொறியின் மூளை எனக் கூறலாம். இதில் தரவுகளைக் கொண்டு எண்கணிதச் செயல்பாடுகளையும், தர்க்கச் செயல்பாடுகளையும் (logical Operations) செய்யும் ஒரு பகுதி உள்ளது. இது எண்கணித தர்க்கச் செயலகம் (ALU - Arithmetic Logic Unit) எனப்படும். இது கூட்டல், வகுத்தல் போன்ற கணிதச் செயல்பாடுகளையும், and, or , if போன்ற தர்க்கச் செயல்பாடுகளையும் செயல்படுத்த வல்லது. இந்தப் பகுதியையும், நினைவகம் மற்றும் உள்ளீட்டகம், வெளியீட்டகங்களையும் கட்டுப்படுத்தி, தேவையான செயல்பாடுகளை, கொடுத்த தகவலின்படிச் செய்ய

வைக்கும் கட்டுப்பாட்டுப் பகுதி ஒன்றும் உள்ளது. இது கட்டுப்பாட்டகம் (Control Unit) எனப்படும்.

குறிப்பு

**மையச் செயலாக்ககம்**




படம் 1 : மையச் செயலாக்கம்

கட்டுப்பாட்டகப் பகுதிகளில் ஒன்றிலிருந்து மற்றொன்றுக்கு பல தரவுகள் இணையாகச் செல்ல பல கம்பிகள் சேர்ந்த ஒரு தொகுப்பு இணையாக அமைந்திருக்கும். இத்தகைய கம்பிகளின் தொகுப்பு பாட்டை (BUS) எனப்படும். தரவுகள் செல்லவும், கட்டுப்பாட்டு சமிக்ஞைகள் செல்லவும் தனித்தனி பாட்டைகள் உண்டு.

## 11.3 முக்கிய நினைவகம் (Main Memory)

**நினைவகம்**

கணிப்பொறியை தொடங்குவதற்கு முன் அதற்கான தரவுகளும், செயல்முறையைக் கூறும் நிரலும், கணிப்பொறியின் நினைவகத்தில் இருக்க வேண்டும். அப்போதுதான் கணிப்பொறி விரைவாகச் செயல்பட முடியும். இந்த உள் நினைவகங்கள், மின்சாரம் செலுத்துவது நின்று போனால் நினைவிழந்து போகும். மின்சாரம் இல்லாத போதும் நினைவிழக்காத நினைவகங்கள் உள்ளன. இவற்றில் தான் பிற்காலத் தேவைக்கான நிரல் மற்றும் தரவுகளைத் தேக்கிவைத்துப் பயன்படுத்துகிறோம். இது இரண்டாம் நிலை நினைவகம் (Secondary Storage) எனப்படும். இதன் கொள்ளளவு மிக அதிகமாகவும், விலை குறைவாகவும் இருக்கும்.

**நிரல் தேக்கத் கருத்து**

குறிப்பு

ஒரு கணிப்பின் தரவுகளும், நிரலும் முதன்மை நினைவகத்தில் வைக்கப்படும். கணிப்பு தொடங்கியதும், கட்டுப்பாட்டகம் நிரலின் கட்டளைகளை ஒவ்வொன்றாக எடுத்துச் செயல்படுத்தி முடிக்கும். இந்த செயல்பாடுகளை எல்லாம் மனிதரின் தலையீடு இல்லாமல் நடக்கும். ஒரு நிரல் அதன் கட்டுப்பாட்டில் இருக்கும் நினைவகத்தில் எந்தப் பகுதியிலும் மாற்றி எழுத முடியும். மையச் செயலகம் மையச் செயலகத்தின் பணிகள் மையச் செயலகம்தான் கணிப்பொறியின் மூளை எனலாம். அது இரு வேளைகளைச் செய்கிறது. கணிப்பொறியின் எல்லாப் பகுதிகளையும் கட்டுபடுத்தி வேலை வாங்குகிறது.

கணித தர்க்கச் செயல்பாடுகளைச் செய்கிறது. செயலகத்தில் மூன்று பெரிய பகுதிகள் உள்ளன. அவை

1. எண்கணித தர்க்க செயலகம் (ALU-Arithmetic Logic Unit)
2. கட்டுப்பாட்டகம் (Control Unit)
3. பதிவேடுகள் (Register)

ஆகியவை ஆகும். ஏஎல்யூ எனப்படும் கணித தர்க்கச் செயலகத்தில்தான். கூட்டல், வகுத்தல் போன்ற கணிதச் செயல்பாடுகளும், AND > OR = போன்ற தர்க்கச் செயல்பாடுகளும் நடக்கின்றன. இதற்கான தரவுகள் நினைவகத்திலிருந்து கொண்டு வரப்பட்டு, பதிவேடுகள் எனப்படும் அதிவேக நினைவகத்தில் வைக்கப்படும். ஏஎல்யூ தரவுகளை அங்கிருந்து எடுத்து செயல்படுத்தி, விடைகளை திரும்பவும் பதிவேடுகளில் வைக்கும். இவை மீண்டும் நினைவகத்திற்கு அனுப்பபடும். கட்டுப்பாட்டகம்தான் கணிப்பொறியின் எல்லாப் பகுதிகளின் செயல்பாடுகளையும் கட்டுப்படுத்துகிறது. இது நிரலில் உள்ள கட்டளைகளை என்ன என்று பார்க்கிறது. அதன்படி செயலாற்ற எல்லாப் பகுதிகளுக்கும் கட்டுப்பாட்டு சமிக்ஞைகளை அனுப்பி வைக்கிறது. இதையே திரும்பத் திரும்பச் செய்கிறது

நிரல் முதலில் கணிப்பொறியில் வைக்கப்படுகிறது. அடுத்து கணிப்பு தொடங்கலாம் என்ற செய்தி கட்டுப்பாட்டகத்திற்கு கொடுக்கிறது. கட்டுப்பாட்டகம் முதல் வரியைப் படிக்கிறது. ஒரு எண்ணைப் படிக்குமாறு விசைப்பலகைக்கு கட்டளை பிறப்பிக்கிறது. நாம் a என்பதன் மதிப்பினை விசைப்பலகை வழியாகச் கொடுக்கிறோம். இந்த எண்ணை நினைவகத்தில், a-வுக்கென தெரிவு செய்யப்பட்ட ஒரு இடத்தில் வைப்பதற்கான கட்டளைகளை கட்டுப்பாட்டகம் பிறப்பிக்கிறது. இதனால் நாம் கொடுத்த எண் நினைவகத்தைச் சென்றடைகிறது. படி நிலைகள் 2 முதல் 4 வரை உள்ளவை திரும்ப ஒரு முறை என்னும் மாறிக்கு செயல்படுத்துப்படுகிறது. அடுத்த கட்டளை ஒரு கணிதச் செயல்பாடு. இதைப் பார்க்கும் கட்டுப்பாட்டகம், ய, டி எனும் மதிப்புக்கள் பதிவேடுகளில் வந்து நிற்கின்றன. உடனே, ஏஎல்யூவிடம் கூட்டலைச்

குறிப்பு

செய்யுமாறு கட்டளை அனுப்புகிறது. ஏஎல்யூ இந்த மதிப்புகளை எடுத்துக் கூட்டி, விடையை ஒரு பதிவேட்டில் வைக்கிறது. இப்போது, கட்டுப்பாட்டகம், கூட்டுத்தொகை என்பதற்கு ஒதுக்கப்பட்டுள்ள நினைவகத்திற்கு இந்த மதிப்பினை அனுப்புவதற்கான கட்டளை சமிக்ஞைகளை அனுப்புகிறது. இதனால் கூட்டுத் தொகை அதற்கான நினைவகத்திற்குப் போய்ச் சேர்கிறது. அடுத்து, இந்த கூட்டுத்தொகை திரைக்கு என இருக்கும் நினைவிடத்திற்கு அனுப்புவதற்கான கட்டளையைப் பிறப்பிக்கிறது. தன் நினைவகத்தில் உள்ளதை, திரைச் சாதனம் இப்போது திரையில் காண்பிக்கிறது. நிரலில் உள்ள கட்டளைகள் எல்லாம் நிறைவேற்றுப்பட்டதால் நிரலைச் செயல்படுத்துவது முடிவடைகிறது.

கணிதச் செயல்பாடுகளான கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தலையும், துர்க்கச் செயல்பாடுகளான இரு எண்கள் அல்லது எழுத்துக்கள் அல்லது சிறப்புக் குறியீடுகளை ஒப்பிடுதல், AND > OR > NOT செயல்பாடுகளை போன்றவற்றைச் செய்யும் பகுதி இது. இதற்குத் தேவையான தரவுகளை எடுத்துக் கொடுப்பது, எந்தக் கணிப்பைச் செய்ய வேண்டும் என்று சொல்வது என்பதை எல்லாம் கட்டுப்பாட்டகம் தீர்மானித்து, அதற்கான கட்டளைகளைப் பிறப்பிக்கும். கணிதச் செயல்பாடுகள் தொடங்கும்போது, அதற்கான எண்கள் குறிப்பிட்ட பதிவேடுகளில் வைக்கப்பட்டிருக்க வேண்டும். எந்தச் செயல்பாடு வேண்டும் என்பதற்கான சமிக்ஞையை ஏஎல்யூ பெற்றதும், இந்த மதிப்புகளை எடுத்து, அந்தச் செயல்பாட்டிற்கு என்று உள்ள சுற்றின் வழியாக அனுப்பும். சுற்றின் முடிவில் வரும் விடையை ஒரு பதிவேட்டில் வைக்கும். கூட்டல், பெருக்கல், வகுத்தல்களுக்கென்று தனித் தனிச் சுற்றுகள் இருக்கும்.

கட்டுப்பாட்டகம் எண்களை, இரு இடங்களிலும் இருந்து எடுத்து, இரு பதிவேடுகளில் வைக்கிறது. கூட்டல் என்னும், கட்டளையைப் பெறும் ஏஎல்யூ இந்த இரு எண்களைக் கூட்டுகிறது. விடையை கூடுதல் நினைவிடத்திலவைக்கிறது கட்டுப்பாட்டகம் இந்த விடையை, அதற்கென நினைவிடத்தில் ஒதுக்கப்பட்ட இடத்திற்கு அனுப்புகிறது. தர்க்கச் செயல்பாடுகள் இரு தரவுகளை ஒப்பிட்டு சமமா, சிறியதா, பெரியதா என்று கூறுவதும் AND > OR > NOT என்ற செயல்பாடுகளும் இதில் அடங்கும்.

கணிப்பொறி நினைவகங்களில் பலவகைகள் காணப்படுகின்றன. அவை பின்வருமாறு :

- சீரற்ற அணுகல் நினைவகம் (Random Access Memory - RAM)
- படிக்க மட்டும் நினைவகம் (Read Only Memory - ROM)
- நிரலாக்கு படிக்க மட்டும் நினைவகம் (Programmable Read Only Memory - PROM)

- மின்சாரத்தால் அழியும் நிரலாக்கு படிக்க மட்டும் நினைவகம் (Electrically Erasable Programmable Read Only Memory - EEPROM).

குறிப்பு

**சீரற்ற அணுகல் நினைவகம்** (RAM)

இன்றைய கணிப்பொறிகளின் முதன்மை நினைவகமாகப் பயன்படுவது இந்த வகைதான். இவற்றில் தான் தரவுகளும், நிரல்களும் எழுதி வைக்கப்படுகின்றன. ஏனென்றால், எந்த இடத்திலிருந்தும், தகவலை விரைவாக பெறலாம். மின்சாரம் நிறுத்தப்பட்டதும், இதில் உள்ள தகவல் எல்லாம் அழிந்து விடும். படிக்க மட்டும் நினைவகம் (ROM) இதில் தகவல்கள், சில்லினை உருவாக்கும் போதே எழுதிவைக்கப்படும். இந்தத் தகவல்களை மாற்ற முடியாது. மின்சாரம் இல்லாத போதும் இதில் உள்ள தகவல்கள் அழியாது. கணிப்பொறியைத் தொடங்கும் போது செய்ய வேண்டிய செயல்கள் போன்றவை இத்தகைய நினைவகங்களில் வைக்கப்படுகின்றன.

**படிக்க மட்டும் நினைவகம்** (PROM)

இதுவும் அழியா வகை நினைவகம். இதில் தகவல்களை ஒரு முறை மட்டும் எழுதலாம். சில்லினை உருவாக்கும் போது தகவல்கள் எழுதப்படுவதில்லை. அதற்கெனத் தனியாக உள்ள வன்பொருளைக் கொண்டு நிரல் மூலம் எழுதலாம். அழியும் நிரலாக்கு படிக்க மட்டும் நினைவகம் இந்தச் சில்லில், நிரலாக்கியைக் கொண்டு பலமுறை அழித்து எழுதலாம். புற ஊதா ஒளி மூலம் தகவல்கள் அழிக்கப்படுகின்றன. இதுவும் அழியா வகை நினைவகம்தான்.

**மின்சாரத்தால் அழியும் நிரலாக்க படிக்க மட்டும் நினைவகம்** (EEPROM)

இந்த வகை நினைவகமானது அழித்து எழுதக்கூடிய ஒரு நினைவகம். அழிப்பதற்கு புற ஊதா ஒளி தேவையில்லை. மின்சாரத்தைச் செலுத்தியே அழித்து விடலாம். இது அழியா வகை நினைவகம் பிளாஷ் நினைவகம் (Flash Memory) இந்த வகைதான். இந்த வகை நினைவகம் மற்றவற்றைப் போல் வேகமாகச் செயல்படாது. மைய நினைவகம் எனப்படும் நேரடி அணுகுமுறை நினைவகத்தில் பல அறைகள் இருப்பதாக நினைக்கலாம். ஒவ்வொரு அறைக்கும் ஒரு முகவரி எண் இருக்கும். ஒரு விடுதியில் அறைகளுக்கு எண்கள் இருப்பபது போல், பல தபால் அலுவலகங்களில் பல சிறு பெட்டிகள் இருக்கும் ஒவ்வொன்றிற்கும் ஒரு எண் இருக்கும். தபால் பெட்டி எண்ணுக்கு வரும் கடிதங்கள் இவற்றில் போடப்படும். அந்த எண்ணுக்கு உரியவர் அவ்வப்போது வந்து இந்தப் பெட்டியிலிருந்து கடிதங்களைச் சேகரித்துக் கொள்வார். தகவல்களைக் குறிப்பிட்ட முகவரி உள்ள அறையில் எழுதி வைக்கலாம். தேவைப்படும்போது அந்த அறை எண்ணைக் கொடுத்து அதில் இருக்கும் தகவல்களைப் பெறலாம்.

## 11.4 கணினி சாதனங்களின் கட்டுப்பாடு (Peripheral Controllers)

குறிப்பு

கணிப்பொறியில் குறிப்பாக கணினி வன்பொருளில், அதை கட்டுப்படுத்தும் ஒரு சில் (Chip) (அது போன்ற மைக்ரோ கண்ட்ரோலர்), ஒரு விரிவாக்க அட்டை (Expansion Card), அல்லது ஒரு தனித்த சாதனம் கணிப்பொறியில் அனைத்து சாதனங்களையும் கட்டுப்படுத்தும் பணியை செய்யும் ஒரு புற சாதனம் ஆகும். ஒரு கணினி (உதாரணமாக ஒரு இரண்டு பாகங்களுக்கான ஒரு இணைப்பை இருக்கலாம்) நினைவகத்தை கட்டுப்படுத்தி என்று நினைவகத்தை அணுகமுடியும்.

மேசைக் கணினிகளில் கட்டுப்படுத்த ஒரு செருகுநிரல் பலகை, மதர்போர்டில் ஒற்றை ஒருங்கிணைந்த சுற்று அல்லது வெளிப்புற சாதனமாக அமைந்து கணினி பாகங்களை கட்டுப்படுத்துகிறது.

கணினி கம்பிகளின் தொகுப்பு பட்டையை (Bus) இருபுறமும் கட்டுப்பாட்டு சாதனங்கள் இருக்க முடியும். ஹோஸ்ட் (Host) பக்கத்தில் உள்ள கட்டுப்படுத்தி (ஹோஸ்டின் உடல் பகுதி) ஹோஸ்ட் கன்ட்ரோலா் அல்லது ஹோஸ்ட் பஸ் அடாப்டர் (Bus Adopter) என்று அழைக்கப்படுகிறது. பக்கத்தில் உள்ள கட்டுப்படுத்தி (புற சாதனத்தின் உடல் பகுதி) ஒரு புற கட்டுப்படுத்தி (External Controller) என்று அழைக்கப்படுகிறது. வட்டு கட்டுப்படுத்திகள் (Disk Controllers) மற்றும் பிளாஷ் நினைவக கன்ட்ரோலா்கள் (Flash Memory Controllers) அவை நவீன அமைப்புகளில் வழக்கமாக இயக்ககத்தில் ஒருங்கிணைக்கப்படுகின்றன.

கணினி முதன்மை குழுவில் நான்கு வகையான கட்டுப்படுத்திகள் உள்ளன. அவை பின்வருமாறு:

1 ஹோஸ்ட் மற்றும் புற கட்டுப்படுத்திகள் (Host and External Controllers)
2 பலகைகள் கட்டுப்பாட்டாளர் (Board Controllers)
3 கட்டுப்பாட்டு சில்லுகள் (Controller Chip)
4 வெளிப்புற கட்டுப்படுத்திகள் (External Controllers)

கணினி பஸ்ஸின் (Bus) இருபுறமும் கட்டுப்படுத்திகள் (Controllers) அமைந்திருக்கும். ஹோஸ்டிலுள்ள அருகில் அமைந்திருந்கும் கட்டுப்படுத்திகள் ஹோஸ்ட் கண்டரோலா் என்று அழைக்கப்படுகிறது. கணினி பஸ்ஸின் (Bus) வெளிப்புற பக்கத்தில் உள்ள கட்டுப்படுத்தி (புற சாதனத்தின் உடல் பகுதி) ஒரு புற கட்டுப்படுத்தி என்று அழைக்கப்படுகிறது. எடுத்துக்காட்டுகள் வட்டு கட்டுப்படுத்திகள் மற்றும் ∴பிளாஷ் மெமரி கன்ட்ரோலா்கள் ஆகும். அவை நவீன அமைப்புகளில் வழக்கமாக இயக்ககத்தில் ஒருங்கிணைக்கப்படுகின்றன.

இந்த வகைப்பாடு நெட்வொர்க் கன்ட்ரோலர்களுக்கு பொருந்தாது, ஏனென்றால் அமைப்புகள் சகாக்களாக பங்கேற்கின்றன, மேலும் எந்த அமைப்பும் தெளிவாக மையமாகவோ அல்லது அருகிலோ இல்லை.

நெட்வொர்க் இன்டர்∴பேஸ் கன்ட்ரோலர் (என்ஐசி) என்ற சொல் பெரும்பாலும் கணினி நெட்வொர்க்குகளுடன் இணைக்கும் சாதனங்களுக்குப் பயன்படுத்தப்படுகிறது, அதே நேரத்தில் ஈதர்நெட் வழியாக ஐ.எஸ்.சி.எஸ்.ஐ அல்லது ∴பைபர் சேனல் போன்ற நெறிமுறைகள் ஒரே உடல் இணைப்பில் சேமிப்பகத்தையும் பிணைய செயல்பாட்டையும் அனுமதிக்கும்போது ஒருங்கிணைந்த பிணைய அடாப்டர் என்ற சொல்லைப் பயன்படுத்தலாம் .

**வீடியோ கட்டுப்படுத்தி** (Graphics Controller)

ஒரு வீடியோ கட்டுப்படுத்தியானது கிராபிக்ஸ் அட்டை, காட்சி அட்டை, கிராபிக்ஸ் அடாப்டர், அல்லது காட்சி அடாப்டர் என்றும் அழைக்கப்படுகிறது. வீடியோ கட்டுப்படுத்தியானது படங்கள் மற்றும் வீடியோவை உருவாக்கும் ஒரு கணிப்பொறி சாதனமாகும். இவை தனித்துவமான அல்லது அர்ப்பணிப்பு கிராபிக்ஸ் என விளம்பரப்படுத்தப்படுகின்றன. இவை மற்றும் ஒருங்கிணைந்த கிராபிக்ஸ் இடையே உள்ள வேறுபாட்டை வலியுறுத்துகின்றன. இரண்டின் மையத்திலும் கிராபிக்ஸ் செயலாக்க அலகு (GPU) உள்ளது. இது உண்மையான கணக்கீடுகளைச் செய்யும் முக்கிய பகுதியாகும்.

பெரும்பாலான வீடியோ கட்டுப்படுத்திகள் 6 அங்குல அளவில் கிடைக்கிறது. மேலும் மெருகூட்டும் வீடியோ தேவைக்காக அவற்றின் ஒருங்கிணைந்த கிராபிக்ஸ் செயலி கூடுதல் செயலாக்கத்தை செய்ய முடியும். இந்த பணியை கணினியின் மைய செயலியில் இருந்து நீக்குகிறது. எடுத்துக்காட்டாக, என்விடியா (Nvidia) மற்றும் ஏஎம்டி (AMT) வன்பொருள் மட்டத்தில் ஓபன்ஜிஎல் மற்றும் டைரக்ட்எக்ஸ் என்ற கிராபிக்ஸ் வழிகளை வழங்கும் சாதனத்தை தயாரித்தன 2010ஆம் வருடத்திற்கு பிறகு கிராபிக்ஸ் அல்லாத பணிகளைத் தீர்க்க கிராபிக்ஸ் செயலியின் கணினி திறன்களைப் பயன்படுத்துவதற்கான ஒரு போக்கும் காணப்படுகிறது. வழக்கமாக, கிராபிக்ஸ் அட்டை அச்சிடப்பட்ட சர்க்யூட் போர்டு (விரிவாக்க வாரியம்) வடிவத்தில் தயாரிக்கப்பட்டு விரிவாக்க ஸ்லாட்டில் செருகப்படுகிறது.

## 11.5 கணினி சாதனங்கள; (Computer Peripherals)

தற்கால கணினி பல்வேறு வகையான இணை சாதனங்களைக் கொண்டுள்ளது. அவை குறிப்பாக கணிப்பொறியில் உள்ளீடு செய்வதற்கும் தரவுகளை வெளியிடுவதற்கும் உறுதுணையாக

குறிப்பு

இருக்கின்றன. அவற்றில் சில முக்கியமான கணினி சாதனங்களைப்பற்றி கீழே விளக்கப்பட்டுள்ளன

**விசைப்பலகை**

தரவுகளை உள்ளிட இன்று அதிகம் பயன்படும் சாதனம் விசைப்பலகை. இதில் தட்டச்சுப் பலகையில் இருப்பது போல பல விசைகள் உள்ளன. ஆங்கில எழுத்துக்களுக்கு, எண்களுக்கு, காற்புள்ளி போன்ற நிறுத்தல் குறியீடுகளுக்கு, சிறப்புச் செயல்பாடுகளுக்கு என நான்கு வகை விசைகள் உள்ளன. இதில் உள்ள விசைகள் தட்டப்பட்டால் தேவையான ஆஸ்கி குறியீடு (ASCII) கணிப்பொறிக்கு அனுப்பப்படுகிறது.

**சுட்டி (Mouse)**

இது தோற்றத்தில் சுண்டெலி போன்று இருப்பதனால் ஆங்கிலத்தில் இது Mouse என்று அழைக்கப்படுகிறது. இது திரையில் தோன்றும் இடம் சுட்டியை (Curser)-ஐ நகர்த்தப் பயன்படுகிறது. சுட்டி நகரும்போது, சமிக்ஞைகளை கணிப்பொறிக்கு அனுப்பி சுட்டியை நகர்த்தும்.

**நுண் பேசி (Micro Phone)**

பேசும் ஒலியைப் பெற்று கணிப்பொறிக்குத் தரவுகளாக அனுப்பும் சாதனம் இது. இந்தத் தரவுகளை அலசி, எந்தச் சொற்கள் பேசப்பட்டன என்பதைக் கண்டறிய மென்பொருள்கள் தேவை. இது விசைப்பலகை, சுட்டி போன்றவற்றைப் பயன்படுத்த முடியதாவற்களுக்கு பெரிதும் பயன்படும். பார்வையற்றோருக்கு இது மிகவம் உதவும்.

**வருடி (Scanner)**

இது படங்களையும் உரையையும் கணினிக்கு உள்ளிட உதவும். இதன் மீது வைக்கப்பட்டுள்ள காகிதத்தில் உள்ளதை ஒரு படமாகக் கணிப்பொறிக்குக் மாற்றிக்கொடுக்கிறது. காதிதத்தில் இருக்கும் படங்கள் மற்றும் எழுத்துக்களை பல்வேறு வகையான கோப்பு வடிவில் மாற்றி சேமிக்க உதவுகிறது.

**பட்டைக் குறியீடு படிப்பான் (Bar code Reader)**

ஒரு பொருளைப் பற்றிய தகவல்களை (அடையாளம், விலை போன்றவை) அந்தப் பொருளின் பெட்டியின் மேல் பலவித தடிமன்கள் உள்ள கோடுகளின் தொகுதிகளாக அச்சிட்டிருப்பார்கள். இது பட்டைக் குறியீடு எனப்படும். இதைப் பார்த்து பொருளின் பெயர், விலை போன்றவற்றை கணிப்பொறிக்கு அனுப்பும் இது சிறப்பு அங்காடிகளில்

பெரிதும் பயன்படுகிறது. பணியாளர்களின் நேரத்தை மிச்சப்படுத்துவதோடு தவறுகள் நேர்வதைத் தடுக்கிறது.



**தொடுதிரை**

திரையில் காண்பிக்கப்படும் பலவற்றில் ஒன்றினைத் தேர்வு செய்ய, அந்த தேர்வின் மீது விரலால் தொட வேண்டும். திரை இதை உணர்ந்து எது தேர்வு செய்யப்பட்டது என்பதைக் கணிப்பொறிக்கு அனுப்பும்.

**இலக்கவகைக் கேமரா**

இது படங்களை எடுத்து, அவற்றை கணிப்பொறிக்கு அனுப்பும். பெரும்பாலும் நகராப் படங்களை எடுக்கும். நகரும் படங்களை எடுக்கும் வகையும் உண்டு கணிப்பொறிக்கு மேலே உட்கார்ந்திருப்பது இந்த வகை.

**காந்த மை எழுத்து உணரதல் (Magnetic Ink Character Recognition MICR)**

எம்ஐசி ஆர் காசோலைகள் வங்கிகளில் பெரிதும் பயன்படுகிறது. இதில் காசோலை மற்றும் வங்கி எண்கள் நாம் படிக்கக் கூடிய எண்கள், காந்த மையினால் அச்சிடப்பட்டிருக்கும். இவற்றை இயந்திரங்கள் படிப்பதனால், தவறுகள் நேராது. நேரத்தை மிச்சமாக்குகிறது. பாதுகாப்பாகவும் இருக்கும்.

**ஒளி வழி எழுத்து உணர்தல் (OCR - Optical Character Recognition)**

சாதாணரமாக அச்சிடப்பட்ட எழுத்துக்களைப் பார்த்து, அதாவது வருடியினால் படமாக மாற்றப்பட்டதைப் பார்த்து, அந்த எழுத்துக்களை அடையாளம் காணுதல் ஒளிவழி எழுத்து உணர்தல் எனப்படும். இதற்கு எம்ஐசிஆர் போல் காந்த மை தேவையில்லை. சாதாரண மை போதும். சில ஒளி வழி எழுத்து உணரிகள், குறிப்பிட்ட அமைப்பில் அச்சிடப்பட்ட எழுத்துக்களை மட்டும் அடையாளம் காணும். புத்தகங்கள் போன்றவற்றில் உள்ள பலவித எழுத்துக்களையும் அடையாளம் காணும் உணரிகளும் உள்ளன. ஆங்கிலம், தமிழ் போன்று பல மொழிகளுக்கும் இந்த உணரிகள் உருவாக்கப்பட்டுள்ளன. இந்த உணரிகள் படிக்கும் எழுத்துக்களை, மாற்றங்கள் செய்யக்கூடிய உரையாக மாற்றித் தரும்.

**ஒளிப்பேனா (Light Pen)**

பேனா வடிவில் உள்ள இது திரையகத்துடன் இணைக்கப் பட்டிருக்கும். இதன் முனையைத் திரையின் மீது வைத்தால், அந்த இடம் ஒளிரும் நேரத்தைக் கணக்கிட்டு, பேனா தொடும் இடம் அறியப்படும். இதைச் செயல்படுத்துவது எளிமையாக இருப்பதில்லை. அதனால் இதன்

பயன்பாடு மிகவும் குறைவாகவே உள்ளது. இதைக் கொண்டு நேரடியாகத் திரையில் வரைய முடியும் என்பது இதன் சிறப்பு.

குறிப்பு

**காந்தப் படிப்பான் (Magnetic Reader)**

காந்தப் பட்டையைப் படிக்கவும், எழுதவும் உதவும் சாதனம் இது. பற்று அட்டை (Credit card) ஏடிஎம் அட்டை (யுவுஆ உயசன), பெட்ரோ அட்டை (ிநவசழ ஊயசன) முதலியவற்றின் உரிமையாளரை விரைவாக அடையாளம் காண உதவும்.

**திரையகம்** (Monitor)

கணிப்பொறியில் அதிக அளவில் பயன்படும் வெளியீட்டுச் சாதனம் இது. கணிப்பொறியுடன் இணைக்கப்பட்டிருக்கும் இந்த திரையகம், தொலைக்காட்சிப் பெட்டி போன்று இருக்கும். தொடக்க காலத்தில் திரையகங்கள் ஒரு வண்ணத் (Monochrome) திரைகளையே பெற்றிருந்தன. தற்போது பல வண்ணங்களைக் காட்டுகின்றன. எழுத்துக்களுடன் படங்களும் காட்டப்படுகின்றன. திரையில் பல புள்ளிகள் ஒளிர்வதன் மூலம், படங்களும் எழுத்துக்களும் உருவாகின்றன. இந்தப் புள்ளி பிக்செல் (Pixel) எனப்படும். இந்தப் புள்ளிகளின் எண்ணிக்கை 640 x 480, 800 x 600, 1024 x 768 என்று பல விதங்களில் இருக்கும். இது அகல உயர விகிதம் (aspect ratio) ஆகும். புள்ளிகளின் எண்ணிக்கை அதிகமாக அதிகமாக படங்கள் துல்லியமாக வெளிப்படுத்தும்.

**அச்சுப்பொறி (Printer)**

கணிப்பொறி கோப்புகளில் அமைந்துள்ள எழுத்துகள், படங்ககள் முதலானவற்றை அச்சிடுவதற்கு அச்சுப்பொளிகள் பயன்படுகின்றன. அச்சுப்பொறிகள். வேகம், அச்சுத்தரம் என்பவற்றில் இவை பலவாறு வேறுபடும். அச்சுப்பொறிகளை பொதுவாக தட்டல் வகை (Impact) தட்டா வகை (Non-impact) என இரண்டு குழுக்களாகப் பிரிக்கலாம்.

அச்சுப்பொறிககளின் மேற்கண்ட பிரிவுகளின்கீழ் காணப்படும் வகைகள் பின்காணலாம்.

- மைக்ரோ பொறி
- வெப்ப வகை அச்சுப்பொறி
- லேசர் அச்சுப்பொறி (Laser Printer)
- மை அச்சுப்பொறி (Inkjet Printer)

**தேக்க சாதனங்கள்**

அதிகத் தரவுகளை, அதிக நேரத்திற்குத் தேக்கி வைத்திருந்து, தேவையான போத கணிப்பொறிக்குக் கொடுப்பவை தேக்க சாதனங்கள்

அல்லது தேக்கங்கள் எனப்படும். காப்புத் தேக்கம் (backup storage) என்றும் கூறப்படும். வன் வட்டு, நெகிழ் வட்டு, காந்த நாடா, மின் தட்டு (CD ROM) போன்றவை தேக்ககங்கள். இவற்றைப் புரிந்து கொள்ள காந்தம், மின்னணுவியல் மற்றும் மின் இயந்திரங்கள் பற்றி அறிந்திருக்க வேண்டும்.

**ஒலிபெருக்கி (Speaker)**

ஒலி வகையில், பேச்சையும் இசையையும் வெளியிட உதவும் சாதனம் ஒலிப்பெருக்கி உரையிலிருந்து பேச்சை உருவாக்க தனி மென் பொருள்கள் உள்ளன.

**வரைவி (Plotter)**

வீடு கட்டுவதற்கான வரைபடங்கள், பொறிகள் மற்றும் சாதனங்களின் அமைப்பைக் கூறும் படங்கள் போன்றவற்றைத் தயாரிப்பதற்கெனவே இந்த வரைவிகள் உருவாக்கப்பட்டுள்ளன.

## 11.6 சுய பரிசோதனைக் கேள்விகள்

1. மைய செயலாக்ககத்தின் பணிகள் யாவை?
2. முக்கிய நினைவகம் எவ்வாறு செயல்படுகிறது.
3. கணினி சாதனங்களின் கட்டுப்பாட்டை விளக்குக.
4. கணினி சாதனங்கள் வகைப்படுத்துக.

# அலகு 12

# மென்பொருள் (Software)

குறிப்பு

**அமைப்பு**

12.1 மென்பொருள் (Software) - அறிமுகம்

12.2 மென்பொருளின் தேவை

12.3 மென்பொருள் என்றால் என்ன?

12.4 மென்பொருள் வகைகள்

12.5 கணினி இயங்கு மென்பொருள்

12.6 மொழி தொகுப்பான்கள்

12.7 நிரலாக்க மொழிகள்

12.8 சுய பரிசோதனைக் கேள்விகள்

## 12.1 மென்பொருள் (Software) - அறிமுகம்

இன்று நாம் பயன்படுத்தும் கணிப்பொறியில் இரு முக்கிய பகுதிகள் உள்ளன. அவை வன்பொருள் (Hardware) மற்றும் மென்பொருள் (Software). நம்மால் பார்க்கக் கூடிய பருப்பொருள் அனைத்தும் வன்பொருள் என்னும் கூறில் அடங்கும். நம் கண்களால் காண முடியாத, கணிப்பதற்கான கட்டளைத் தொகுப்புகள் மென்பொருள் என்ற கூறில் அடங்கும்.

## 12.2 மென்பொருளின் தேவை

இன்றைய வணிக உலகில் கணிப்பொறியின் தேவை இன்றியமையாததாக உருவாகியிருக்கிறது. அனைத்து துறையினரும் கணிப்பொறியை அவரவர் தேவைக்கு ஏற்ப பல பணிகளை எளிதாக்க, அவர்களின் பணிகள் விரைவாக முடிக்கவும் கணிப்பொறி பயன்பாடு முக்கியமானதாக மாறிவிட்டது. அனைத்து துறைகளும் அவர்களின் துறைக்கான அனைத்து வசதிகளுடன் தயாரிக்கப்பட்ட மென்பொருட்களை பயன்படுத்துகின்றனர். ஆகவே மென்பொருளின் தேவை மிக இன்றியமையாததாக மாறிவிட்டது.

குறிப்பு

மேலும், பல்வேறு பணிகளுக்கு பொது நோக்கத்திற்கான வன்பொருளை பயன்படுத்துவதை இது சாத்தியமாக்குகிறது, இது வன்பொருளின் பல்திறமையை கணிசமாக அதிகரிக்கும். சிக்கலான பணிகளுக்கு, வேலையைச் செய்ய மிகவும் சிக்கலான மென்பொருளைக் கொண்ட ஒப்பீட்டளவில் எளிமையான இயந்திரத்தை வடிவமைப்பது பெரும்பாலும் எளிதானது.

வன்பொருள் மட்டும் சாதனங்கள் அவை உருவாக்கிய ஒரே ஒரு பணியை மட்டுமே திறம்படச் செய்கின்றன. சாதனத்தின் செயல்பாட்டை மாற்ற முடியாது. அத்தகைய சாதனங்கள் ஒரு நோக்கத்திற்கு உதவும் சந்தர்ப்பங்கள் இன்னும் உள்ளன. எடுத்துக்காட்டாக, அவை பொதுவாக ஒரு வன்பொருள் மென்பொருள் தீர்வைக் காட்டிலும் வடிவமைக்கப்பட்ட சிக்கலில் மிகவும் திறமையாக இருக்கும்.

## 12.3 மென்பொருள் என்றால் என்ன?

மேலும், மென்பொருள் என்பது கணிப்பொறியின் பணிகளை நிறைவேற்ற அளிக்கப்படும் அறிவுறுத்தல்கள் (Instructions) ஆகும். மென்பொருள் இன்றி கணிப்பொறி எச்செயலையும் செய்ய இயலாது. மென்பொருள் என்பது தேவையான வடிவில் வெளியீடுகளைப் பெற அளிக்கப்படும் அறிவுறுத்தல்களின் தொகுப்பு ஆகும். இது உபயோகிப்பாளர்கள் மற்றும் கணிப்பொறியை இணைக்கும் பாலமாக செயல்படுகிறது. கணிப்பொறி மூலம் பிரச்சனைகளுக்கு தீர்வு காண அளிக்கப்படும் அறிவுறுத்தல்களின் தொகுப்பே மென்பொருள் எனப்படும்.

மென்பொருட்களை அவைகளின் பயன்பாடுகளைப் பொறுத்து பல வகைகளாகப் பிரிக்கலாம்.

- கணிப்பொறி மென்பொருள்
- அமைப்பு மென்பொருள்
- பயன்பாட்டு மென்பொருள்

## 12.4 மென்பொருளின் வகை

கணிப்பொறி அமைப்பு மென்பொருள்களில் மிகவும் முக்கியமானது இயக்க அமைப்பு. இதுதான் கணிப்பொறியின் ஒவ்வொரு சிறு பகுதியும் எப்படிச் செயல்பட வேண்டும் என்று கூறுகிறது. இது கணிப்பொறிக்கும் மற்ற பயன்பாட்டு மென்பொருள் மற்றும் பயனருக்கும் இடையில் செயல்படுகிறது. இது இல்லையென்றால் கணிப்பொறி இயங்காது. டாஸ் (DOS – Disk Operating System), யூனிக்ஸ் (Unix), லினக்ஸ் (Linux)

மற்றும் விண்டோஸ் (Windows) பரவலாகப் பயன்படும் அமைப்பு மென்பொருள்கள்.

குறிப்பு

ஒரு நிரலர் எழுதும் மென்பொருள் உயர்நிலை மொழியில் இருக்கும். இதை மொழிமாற்றம் செய்து கணிப்பொறி மொழியில் கொடுத்தால்தான் கணிப்பொறிக்குப் புரியும். இவ்வாறு மொழி மாற்றம் செய்யும் மென்பொருள் தொகுப்பான் (Compiler) எனப்படும். தொகுப்பானுக்குத் துணை செய்யும் மென்பொருள்களான படியெடுப்பான், வரிசைப்படுத்தி, ஒன்று சேர்ப்பான் போன்றவை அமைப்பு மென்பொருளில் அடங்கும்.

போர்ட்ரான் (Fortran), கோபால் (Cobol), சி (C), சி ப்ளஸ் (C++) போன்ற மொழிகளுக்கெல்லாம் தனித்தனியாக தொகுப்பான்கள் உள்ளன.

அமைப்பு மென்பொருள் கணிப்பொறியைச் செயல்படுத்த உதவுகிறது. பயன்பாட்டு மென்பொருள் நமக்குத் தேவையான பயன்பாடுகளைச் செயல்படுத்துகிறது. அவற்றை அமைப்பு மென்பொருள் அவற்றை அமைப்பு மென்பொருள் துணையுடன்தான் செயல்படுத்துகிறது.

இரயில் பயண முன்பதிவு, சொல் செயலாக்கம் (Word Processing), வானிலை முன்னறிவிப்பு, விளையாட்டு என பல வகை பயன்பாட்டு மென்பொருள்கள் உள்ளன. இவை தனித்தனியாகக் கிடைக்கின்றன. பரவலாகப் பயன்படும் மென்பொருள்களில் சில - சொல் செயலி, விரிதாள் (Spred Sheet), தரவுத்தள மேலாண்மை (Data Base Management), வரைகலை (Graphics) மிக அதிக அளவில் பயன்படும் மென்பொருள் சொல் செயலி எனலாம். இது உரையை உள்ளிடுவதில் பெரிய மாற்றத்தையே ஏற்படுத்திவிட்டது. தட்டச்சு செய்த உரையில் மாற்றங்கள் செய்வது மிகமிக எளிது. திரும்ப ஒருமுறை எல்லாவற்றையும் தட்டச்சு செய்ய வேண்டிதில்லை. இதனால் பெருமளவு நேரமும், பணமும் மிச்சமாகிறது. சொல் செயலியைக் கொண்டு உரையை உள்ளிட , திருத்த, அழகுப்படுத்த, சேமித்து வைக்க, அச்சிட முடியும்.

பல பட்டியல்களில் அடங்கிய எண்களைக் கொண்டு பல புதிய மதிப்புகளைக் கணக்கிட வேண்டியிருக்கும். எடுத்துக்காட்டாக விற்பனைப் பட்டியலில், ஒவ்வொரு பொருளின் மதிப்பும், அவற்றின் கூட்டுத் தொகையும் கணக்கிடப்பட வேண்டும். இதற்கென சார்புகள் இருக்கும். ஒரு எண்ணை மாற்றினால், அதன் விளைவாக பல எண்கள் மாறும், இவற்றை விரைவாக தானாகச் செய்யும் மென்பொருள் விரிதாள். பல எண்களை, பல விதங்களில் மாற்றி, அதனால் விளையும் மாற்றங்களை உடனுக்குடன் தெரிந்து கொள்வது இதனால் சாத்தியமாகிறது, இது தேவையான தகவல்களை வரைபடங்களாகவும் கொடுக்கும் தன்மை பெற்றது. எக்ஸெல் (Ms-Excel) போன்றவை பெயர்பெற்ற விரிதாள்கள்.

தரவுகளை சீரான முறையில் தேக்கிப் பாதுகாக்கும் மென்பொருள் தகவல் தளம் (Database) எனப்படும். இதில் உள்ள தரவுகளில் இருந்து

தேவையானவற்றைத் திரட்டித் தருவது தகவல் தள மேலாண்மை என்னும் மென்பொருள். அத்துடன் தரவுகளை உள்ளிடவும், சீராக வைக்கவும் உதவும். வங்கிகள், விமான, இரயில் முன்பதிவு போன்ற எல்லா அமைப்புகளிலும் தகவல் தளம் ஒரு பெரும் பங்கு வகிக்கிறது.

மென்பொருளை இருவகைகளாகப் பிரிக்கலாம். அவை

1. அமைப்பு மென்பொருள் (System Software)
2. பயன்பாட்டு மென்பொருள் (Application Software)

### 1. அமைப்பு மென்பொருள் (System Software)

அமைப்பு மென்பொருள் என்பது இயந்திர மொழியின் (Machine Language) வழி அமைப்பைக் கொண்டு இயங்கும் மென்பொருளாகும். இது உபயோகிப்பாளர்களையும கணிப்பொறியையும் இணைக்கும் பாலமாகச் செயல்படுகிறது. இது கணிப்பொறியைக் கட்டுப்படுத்தவும் செயல்படுத்தவும் உதவுகிறது. இதில் பின்வருவன அமைப்புகள் அடங்கும்.

அ. வழி அமைப்பு மொழி

ஆ. செயல்முறை அமைப்பு

இ. துணை நிரல்

ஈ. பயன்பாட்டு வழியமைப்பு

### அ. வழி அமைப்பு மொழி Programming Language

இந்த வழி அமைப்பு மொழி என்பது மென்பொருளின் ஒரு பகுதியாகும். இம்மொழி வழி அமைப்பை எழுதப் பயன்படுகிறது. மேலும் இது நேரடியாக பிற கருவிகளின் துணையின்றி கணிப்பொறி செயல்பாட்டிற்கு சென்றடைகிறது. தற்போது பல்வேறு வகையான வழி அமைப்பு மொழிகள் உள்ளன. நிரல் வழி அமைப்பாளர்கள் (Programmer) நன்கு அறிந்த ஓரிரு கணினி மொழிகளில் வழி அமைப்பை எழுதுகின்றனர். ஒவ்வொரு வழியமைப்பு மொழியும் தரமான வழி அமைப்பை உருவாக்க உதவுகிறது. வழி அமைப்பு மொழிகளை பின்வருமாறு பகுக்கலாம். 1. இயந்திர மொழி (Machine Language) 2. குறியீட்டு மொழி (Assembly Language) 3. உயர்நிலை மொழி (High Level Language)

### ஆ. செயல்முறை அமைப்பு (Operating System)

செயல்முறை அமைப்பு என்பது கணிப்பொறியின் அமைப்பு முழுவதும் கட்டுப்படுத்துவதாகும். கணிப்பொறி தயாரிப்பாளர்கள், கணிப்பொறி அமைப்பு முழுவதும் கட்டுப்பாட்டிற்குள் இயங்கும் வகையில் வடிவமைக்கின்றனர். இம்மென்பொருளின் முதன்மையான கூறு முதன்மைக் கட்டுப்பாடாகும். இது தலைமைக் கணிப்பொறி (Mainframe)

குறிப்பு

சிறு கணிப்பொறி (Mini Computer) களில் உள்ள பலவகை வழி அமைப்புகளைக் கட்டுப்படுத்துவதாக உள்ளது. கணிப்பொறி தயாரிப்பாளர்கள் சூழ்நிலைகளுக்கு ஏற்ப இயங்கும் வகையில் தரமான செயல்பாட்டு அமைப்புடன் கணிப்பொறியை தயாரித்துக் கொடுக்கின்றனர்.

**இ. துணை வழியமைப்பு (Subroutine)**

துணை வழி அமைப்பு என்பது ஓரு வழி அமைப்பில் உள்ள குறிப்பிட்ட செய்தியை பலமுறை எழுதுவதற்கு பதிலாக ஒரே முறை மட்டுமே எழுதப் பயன்படும் வழி அமைப்பாகும். இதன் மூலம் வழி அமைப்புகள் எழுதும் நேரத்தைக் குறைக்கவும், தவறுகளை எளிதாகத் திருத்தவும் இயலும்.

**ஈ. பயன்பாட்டு வழி அமைப்பு (Utility Program)**

பயன்பாட்டு வழி அமைப்பு என்பது முன்கூட்டியே எழுதப்படுகின்ற வழி அமைப்பாகும். இவை செய்தித் தள மேலாண்மை அமைப்புமுறை மூலம் தரவுகளை உருவாக்கவும் தீர்வுகளைக் காணவும் அதிக அளவில் பயன்படுகின்றன. உபயோகிப்பாளருக்கு இவ்வழி அமைப்பு முறை மிகவும் எளிதாக உள்ளது

**2. பயன்பாட்டு மென் பொருள் (Application Software)**

பயன்பாட்டு மென்பொருள் என்பது கணிப்பொறி வழி அமைப்பு ஆகும். இது உபயோகிப்பாளருக்கு தேவையான பணிகளைப் பூர்த்தி செய்யும் வகையில் அமைத்துக் கொடுப்பதாகும். இது செயல்பாட்டு அமைப்பில் இருந்து மாறுபட்டது. இதில் உபயோகிப்பாளரின் தேவைக்கு ஏற்ப எண்கள், மற்றும் எழுத்துக்களை உள்ளீடாக அளிக்க இயலும். பயன்படுத்துவோரின் தேவைக்கேற்ப வெளியீடுகளை அளிக்க உதவும் வகையில் உருவாக்கப்படும் மென்பொருள் பயன்பாட்டு மென்பொருள் எனப்படுகின்றன.

## 12.5 கணிணி இயங்கு மென்பொருள்

கணிப்பொறியில் வன்பொருள், மென்பொருள் என்பதை, உடல், உயிர் என்பதற்கு ஒப்பிடலாம். வன்பொருள் உடல் என்றால், மென்பொருள் உயிர். ஒன்றில்லாமல் மற்றது வேலை செய்யாது. மென்பொருளில் இரு வகைகள் உள்ளன. கணிப்பொறியின் பல பகுதிகளையும் கட்டிக் காத்து வேலை வாங்கும் மென்பொருள் அமைப்பு மென்பொருள் (System Software) எனப்படும். கணினி இயற்கு மென்பொருள் இன்றி கணிப்பொறி இயங்கமுடியாது.

நமது தேவையான பணியைச் செய்ய எழுதும் மென்பொருள் பயன்பாட்டு மென்பொருள் (Application Software) எனப்படும். இன்றைய கணிப்பொறி மிகவும் சிக்கலான அமைப்புகளைக் கொண்டது. பலப்பல வகை வன்பொருள்களை உள்ளடக்கியது. அவற்றின் பொதுவான பயன்பாடு ஒன்றாக இருந்தாலும், அவற்றை அணுகி, நிர்வகித்து செயல்படுத்தும் விதம் மாறுபட்டிருக்கும். அதனால், உள்ள எல்லா வன்பொருள்களையும் நிர்வகிக்கும் திறன் பெற்ற அமைப்பு மென்பொருளின் உதவியோடு, பயன்பாட்டு மென்பொருள்கள் செயல்படுகின்றன.

## குறிப்பு

தொடக்க காலத்தில் நிரல் எழுதுபவரே நேரடியாகக் கணிப்பொறியைப் பயன்படுத்தினார். கணிப்பொறியின் அமைப்பு பெரியதாகி, சிக்கல்களும் அதிகமாக ஆக, நேரடி இயக்கம் சாத்தியமற்றதாகியது. வன்பொருள்கள் ஒவ்வொன்றையும் நன்கு அறிந்து, அவற்றின் செயல்பாடுகள் இவை என்பதை மட்டும், வெளி உலகிற்குக் கொடுக்கும் மென்பொருள் படிப்படியாக உருவானது. இது இயக்க அமைப்பு (Operating System) எனப்படும். இது வன்பொருள்களைச் செயல்படுத்துவதில் உள்ள சிக்கல்களை வெளியில் தெரியாமல் மறைந்துவிடும். என்ன செய்ய வேண்டும் என்பதை மட்டும் வெளியில் இருந்து பெற்று, அதைச் செய்து கொடுக்கும். எனவே, இயக்க அமைப்பானது வன்பொருளுக்கும், வெளி உலகிற்கும் இடையில் உள்ள ஒரு இடைமுகமாகப் (Interface) பயன்படுகிறது.

நாம் ஒருவரிடம் ஒரு பொருளை வாங்கிவாரச் பணிக்கும்போது, எங்கு?, எவ்வளவு விலையில்? எந்த இடத்தில் என்று பல சிறு சிறு தகவல்களும் இருந்தால்தான் இந்த பணிக்கப்பட்ட பொருளை வாங்கிவர முடியும். ஆனால் அதையெல்லாம் நாம் தெரிவிக்ககாதபோதும் பொருளை பணித்தவர் தன் சொந்த அனுபவத்தைககொண்டு அந்தப் பொருளை வாங்கிவரமுடியம். இதுபோலத்தான் இயக்க அமைப்பு. நம் தேவைகளை, நமக்குத் தொந்தரவு கொடுக்காமல், அதுவாகவே பல சில்லரை முடிவுகளை எடுத்து, நமக்கு எளிதாக இருக்கும்படி செய்து கொடுக்கும். ஒரு கணிப்பொறியை மிகவும் சிறிய பல நூறு வேலைகளைச் செய்யும் பொறி என்பதை மாற்றி, பெரிய வேலைகள் பலவற்றைச் செய்யும் பொறியாக வெளி உலகிற்குக் காட்டுகிறது இயக்க அமைப்பு. இதனால் கணிப்பொறியை இயக்குவது எளிதாகிறது.

ஆரம்ப காலத்தில், கணிப்பொறியின் பாகங்களை மிக அதிக அளவில் வேலை வாங்க வேண்டும் என்பதற்குத்தான் இயக்க அமைப்பு உருவானது. பயனருக்கு எளிதாக இருக்க வேண்டும் என்பது இரண்டாம் பட்ச நோக்கமாக இருந்தது. ஆனால் இன்று இதுதான் முதல் நோக்கமாக மாறிவிட்டது. ஏனென்றால் அப்போதுதான் அனைவரும் கணிப்பொறியைப் பயன்படுத்த முடியும்.

குறிப்பு

கணினி இயக்க அமைப்பின் நோக்கங்களை இப்படி வகைப்படுத்தலாம்.

1. கணிப்பொறியின் பயன்பாட்டை பயனருக்கு எளிதாக்குவது.

2. பயனரின் நிரல்களை எளிதாகச் செயல்படுத்துவது.

3. கணிப்பொறியின் பகுதிகளின் செயல்திறனை அதிக அளவில் பயன்படுத்துவது.

கணிப்பொறியின் பயன்பாட்டினை எளிதாக்கித் தருவதால், நாம் தேவையான சிக்கல்களுக்கு விடை காண்பதில் கவனம் செலுத்த முடியும். கணிப்பொறியின் பாகங்களின் நுட்பமான செயல்பாடுகளை அறிவதில் நம் முயற்சியை வீணாக்க வேண்டும். ஒரு இயக்க அமைப்பு பலவித மென்பொருள் தொகுதிகளிலும் பயன்படும்படி இருக்க வேண்டும். பலா் தயாரிக்கும் மையச் செயலகம் நிா்வகிக்கும் திறன் இருக்க வேண்டும். புதுப்புது பதிப்புகள் வரும்போது, ஏற்கனவே இருக்கும் பதிப்புகளுடன் இசைந்து இருக்க வேண்டும். அவற்றில் செய்ததும் செய்யவேண்டும். புதிதாகப் பலவும் செய்யலாம். ஏனென்றால் பழைய அமைப்பை வைத்து நிரலை எழுதியவா்கள். அந்த நிரலை புது இயக்க அமைப்பிலும் பயன்படுத்த முடிய வேண்டும்.

கணினி தகவல்களுக்குத் தக்க பாதுகாப்பு அளிக்க வேண்டும். ஒருவா் எழுதிவைத்த கோப்புகளை மற்ற எவரும் அழித்து எழுதாதபடி பாதுகாப்பு செய்யப்பட வேண்டும். மற்றவா் தகவலைப் பாா்க்கவும் இயலக்கூடாது. வணிகத்துறையில் இது மிக முக்கியம். நம் வங்கிக்கணக்கில் இருந்து மற்றவா் பணம் எடுத்துவிடக் கூடாதே ! பல நிரல்கள் செயல்பட்டுக் கொண்டிருக்கும் போது, ஒரு நிரல் பயன்படுத்தும் நினைவகப் பகுதியில் மற்றொரு நிரல் தலையிடாதபடி நினைவகத்தில் பாதுகாப்பு செய்யப்பட வேண்டும்.

கணினியின் மொத்த அமைப்பையும் எளிதில் கண்காணிக்கும்படி வசதிகள் தரப்படி வேண்டும். பலருக்கும் அவ்வப்போது இயக்க அமைப்பு பற்றி பலவித சந்தேகங்கள் தோன்றும். அவற்றை மற்றவா்களிடம் கேட்க சிலா் தயங்குவாா்கள். அவா்களுக்கு உதவும் வகையில், விளக்கங்கள் கொடுக்கப்பட்டிருக்க வேண்டும். அவற்றை விரைவாகவும், எளிதாகவும் பெற வசதி இருக்க வேண்டும்.

### இயக்க அமைப்பின் வரலாறு

ஆரம்ப காலத்தில் நிரலரே கணிப்பொறியுடன் நேரடித் தொடா்பு கொண்டு தங்கள் நிரலை இயக்கினாா். பல அறிவியல் ஆராய்ச்சிகளுக்கும் பல பொதுவான செயல்பாடுகள் இருப்பது கண்டறியப்பட்டது. இவற்றை ஒரு முறை எழுதி வைத்து, தேவைப்படும்போது பயன்படுத்திக் கொள்ளலாம்

என்ற உணரப்பட்டது. இத்தகைய நிரல்களின் தொகுப்பு, நிரல் நூலகங்களாக வைக்கப்பட்டன.

குறிப்பு

சீபீயூவின் விலை மிக அதிகமாக இருந்ததால், அதனை அதிக நேரம் பயன்படுத்தும் வகையில் பணிகள் மாற்றியமைக்கப்பட்டன. ஒரே மாதிரிய பணிகள் திரட்டப்பட்டு, வரிசையாகச் செயல்படத்தப்பட்டன. பிறகு, அடுத்த பணித் திரட்டுக்கான தகவல்களையும், நிரல்களையும், நூலகங்களையும் பணியாளரின் வேகம் மிகக் குறைவு. இதனால் மையச் செயலகத்தில் சில சயமங்களில் வேலை இல்லாமல் இருக்கும். இதை போக்க, தன்னியக்க பணி வரிசைப்படுத்துதல் (Automatic Job Sequencing) அறிமுகமானது. இது உள்ளுறை கண்காணிப்பாளர் (Resident Monitor) எனப்பட்டது. இதுவே இயக்க அமைப்பின் அடிப்படையான தொடக்க வடிவம் எனலாம். அறிவியல் கணிப்புகளில், கணக்கிடுவது அதிகம் இருக்கும். இங்கு மையச் செயலகத்தில் அதிக வேலை செய்யும். உள்ளீட்டு . வெளீயீட்டுச் சாதனங்கள் அப்போது வேலை எதுவும் இல்லாமல் இருக்கும். வணிகத் துறை சார்ந்த கணிப்புகளில் உள்ளீடும், வெளியீடும் அதிகம் இருக்கும். சிபீயூவுக்கு மிகவும் குறைந்த வேலையே இருக்கும்.

இந்த இருவித வேலைகளிலுமே ஏதோ ஒரு சில பகுதிகள் பல நேரங்கள் வேலையின்றி இருக்கின்றன. இது, இருக்கும் வளத்தை சிறந்த முறையில் பயன்படுத்தாமல், வீணாக்குவதாக அமைந்தது. அந்தக் காலகட்டத்தில் தரவுகள் அட்டைகளில் துளைகளாக வைக்கப்பட்டன. இவற்றைப் படிக்க இந்த அட்டைகள் ஒவ்வொன்றாக நகர்ந்து செல்ல வேண்டும். நகரும் செயல் படிப்பதன் வேகத்தை மிகவும் குறைக்கும். அப்போது மையச் செயலகத்தில் வேலையின்றி இருக்கும். இதைப்போக்க, படிப்பதற்கென்று திறன் குறைந்த ஒரு துணைக் கணிப்பொறி பயன்படுத்தப்பட்டது. இது, படித்த தரவுகளை ஒரு இடைநிலை நினைவகத்தில் (Buffer) வைக்கும். தரவுகள் வந்து சேர்ந்ததும், பெரிய கணிப்பொறி அதிலிருந்து தரவுகளை எடுத்துச் செயல்படும். இதேபோல் வெளியீடுகளை ஒரு இடைநிலை நினைவகத்தில் எழுதி வைக்கும். இதனால் பெரிய கணிப்பொறி வேலையின்றி இருக்கும் நேரம் குறைந்தது.

அடுத்து டிஎம்ஏ (Direct Memroy Access) என்னும் யுக்தி உருவாக்கப்பட்டது. இதில் மையச் செயலகத்தின் உதவியின்றி, தரவுகளை நினைவகத்திற்கும் அதிலிருந்தும் அனுப்பு வழி செய்யப்பட்டது. மேலும், சுருளாக்கம் (Spooling) என்னும் தொழில்நுட்பம் உருவாகியது. இதில், பல நிரல்கள் ஒரே சமயத்தில் செயல்பட்டுக் கொண்டிருக்கும் போது, ஒவ்வொன்றிற்கும் தனித் தனியாக உள்ளீடுகளுக்கும், வெளியீடுகளுக்கும் இடம் ஒதுக்கப்பட்டிருக்கும். இந்த இடங்களில் இருந்து அந்தந்தப் பணியை செய்து, வரும் வெளியீடுகளை , அதற்குரிய சுருளில் எழுதி வைத்துவிடும். ஒரு நிரலில் தேவையான தரவு உடனடியாகக் கிடைக்கவில்லை என்றால், அதை

விட்டு மற்ற நிரல்களின் பணியைச் செய்யும். இதனால் மையச் செயலகத்தில் நேரம் வீணாகாமல் செயல்படும். வெளியீட்டுக்கான சுருள்களில் இருந்து, அச்சுப்பொறியின் வேகத்திற்கு ஏற்ப ஒவ்வொன்றாக அச்சிடப்படும். இதனால் இடைநிலை நினைவகத்தைப் பயன்படுத்துவதைவிட சுருளாக்கம் சிறந்த முறை. இந்த முறையினால், பல பணிகளை கணிப்பொறி ஒரே நேரத்தில் செய்ய முடிந்தது. இது பல்நிரல் செயலாக்கம் (Multi Programming) எனப்படும். இதில் சாதாரணமாக, ஒவ்வொரு நிரலுக்கும் ஒரு குறிப்பிட்ட நேரம் ஒதுக்கி அதற்கான செயல்களைச் செய்யுவும் முடியும்.

## பல் பயனர் இயக்க அமைப்பு

ஒரே சமயத்தில் பலரும் அணுகத்தக்க இயக்கமுறை இது. இது நேரப்பகிர்வு முறையில் செயல்படுகிறது. யூனிக்ஸ் (Unix) பல் பயனர் இயக்க அமைப்புக்கு ஒரு எடுத்துக்காட்டு. உள்ளீடு, வெளியீடு பயன்பாட்டு நிரல்களுக்கு தகவல்களை வைக்க இடம் தேவை. இதை அந்தந்த நிரலே எடுத்தக் கொள்ளக்கூடாது. அதற்கு இடம் கொடுத்தால், மொத்த அமைப்பும் சீர்குலைந்து பேகும். ஒரு நிரல் மாற்றி விடும். இது அனுமதிக்கத்தக்கதல்ல. அதனால் எந்தப் பயன்பாட்டு நிரலுக்கும் தேவையான நினைவிடங்களை இயக்க அமைப்புத்தான் ஒதுக்கும். நிரலின் செயல்பாடு முடிந்ததும். அந்த நினைவிடங்களை தன் கட்டுப்பாட்டடில் எடுத்துக் கொள்ளும். மேலும், அந்த நிரல் வேறு இடங்களைப் படிக்கவோ, எழுதவோ விடாது. இதனால் தரவுக் காப்பு பராமரிக்கப்படுகிறது.

இதேபோல், உள்ளீட்டு, வெளியீட்டுச் செயல்பாடுகளையும் பயன்பாட்டு நிரல்கள் செய்ய முடியாது. பல் பயனர் இயக்க அமைப்பில் இதுவும் முக்கியம். வன்வட்டிலிருந்து தகவல்களை நிரலே நேரடியாக படிக்க, எழுத முடியும் என்றால் என்ன ஆகும்? ஒருவர் எழுதி வைத்த தகவல்களை மற்றொருவர் எளிதாகப் படிக்க முடியும். அவற்றை மாற்றியும் விடலாம். இது தகவலின் பாதுகாப்புக்கு மிகவும் ஆபத்து. இம்மாதிரிச் சூழ்நிலையில் வங்கிகள் போன்றவை பணியாற்றுவது இயலாத செயல்.

கணினியின் நினைவகங்கள் மட்டுமல்லாமல், உள்ளீட்டகங்கள் மற்றும் வெளியீட்டகங்களையும் பயன்பாட்டு நிரல்கள் நேரடியாக வேலை வாங்க முடியாது. இது அனுமதிக்கப்பட்டால், ஒரு நிரலுக்கு வரவேண்டிய தகவலை, இன்னொரு நிரல் பெறும். இரண்டு நிரல்கள் ஒரே சமயத்தில் அச்சிட ஆணையிட்டு, அச்சுப்பொறிக்குத் தகவல்களை அனுப்பினால், அந்த அச்சுப்பொறியில், இருவர் தகவல்களும் சேர்ந்து குழப்பத்தை அல்லாவா வெளிப்படுத்தும். கணிப்பொறியின் வளங்களை, நினைவகம், உள்ளீட்டகம் மற்றம் வெளியீட்டகங்களை, பயன்பாட்டு நிரல்கள் நேரடியாகப் பயன்படுத்த முடியாது எனப் பார்த்தோம். அப்படியானால் ஒரு பயன்பாட்டு நிரலில் இதற்கான ஆணைகள் இருந்தால் என்ன

